

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஆடி - 2012-சூலை

கோவிலூர் ஆண்டவர்

சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர்

கோவிலூர் மடாலயம் - கோவிலூர் - காரை

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஆடி - 2012 - சூலை    இதழ் - 1

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனிச் சுற்றுக்கு

உ
சிவமயம்

## இறை வணக்கம்




வானவர் அசமாந் தொடர்பினால் உலகோர்
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வான அரதன மணிஅறு முகனை
மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாதை
வான வரதனாம் முத்திராம ஈச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.

### ஸ்ரீ முத்திராமலிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் துதி

வேதமுதல் முனிவர்களும் தேடிக் காணா
மெய்ப்பொருளே அடியர்பவம் நீக்க வேண்டி
ஓதரிய கழனிநகர் தனில்அ மர்ந்த
உத்தமனே அத்தனுளத்து உணர்வே போற்றி
ஏதமதாம் விடயமதில் உழல்வே னுக்கிங்கு
ஈதனைத்தும் சொரூபமென இசைத்தாய் போற்றி
மூதுணர்வே வடிவாகி அமர்ந்து நின்ற
முத்திரா மக்கனியே போற்றி போற்றி !

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

அன்பர்கள் அனைவருக்கும் நம் அன்பு கலந்த ஆசிகள்.

தெய்வத்திரு. நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் சித்தி அடைந்து மாதங்கள் ஒன்பது சென்று விட்டன. அவர்கள் கொண்ட கனவுகள், ஆசைகள் மிகப்பல; விரிவானவை. சுவாமிகளின் கனவுகளில் ஒன்றான கலைக்கல்லூரி, இந்தக் கல்வியாண்டில் தொடங்கப்படவுள்ளது. தொடர்ந்து கல்வி நிறுவனங்கள் தொடங்கப்படும்; பல்கலைக்கழகம் உருவாகும்.

சுவாமிகளின் ஆசைகளுள் ஒன்று மடாலயத்தின் சார்பாகத் திங்கள் இதழ் ஒன்றினை வெளியிட வேண்டும் என்பது. அதனை நிறைவேற்றும் வகையில் இத்திங்கள் இதழ் வெளியிடப்படுகிறது. தவத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் அறச்செயல்களான முதியோர் உதவித்தொகை, திருமண உதவி, கல்விக்கடன் வசதி, வேத ஆகமப்பாடசாலை உதவி அனைத்தும் முறைப்படி தொடரப்படுகின்றன. விரிவாக்கம் செய்ய முடிந்தால், தேவை என்றால் வருங்காலத்தில் விரிவாக்கம் செய்யப்படும்.

இந்தத் திங்கள் இதழின் முதன்மை நோக்கம் திருமடத்தின் தத்துவக் கருத்துக்களை, செயல்களை, வளர்ச்சியினை நம் அன்பர்கட்கும் பக்தர்கட்கும் தெரியப்படுத்துவதே. அத்துடன் பக்தி இலக்கியங்களையும் நன்னெறி இலக்கியங்களையும் அன்பர்கட்கு அறிமுகப்படுத்தவும் நம் திங்கள் இதழ் பயன்படும். இது முழுக்க முழுக்க ஆன்மிக இலக்கிய இதழாகவே நடத்தப்பெறும்.

இதனை நடத்துவதற்குப் பொறுப்பும் தகுதியும் வாய்ந்த ஆசிரியர் குழு பொறுப்பேற்றுக் கொண்டுள்ளது. இதனைப் பயன்பாடு கொண்ட இதழாக வளர்க்க வேண்டிய அத்தனை முயற்சிகளும் அவ்வாசிரியர்கள் மேற்கொள்வார்கள்.

நம் திங்களிதழ் சிறப்புற வளர வேண்டும்; இதன் வழி நம் அன்பர்களின் ஆன்மிக இலக்கிய ஈடுபாடு அதிகரிக்க வேண்டும். இந்த இதழ் நம் அன்பர்களிடையே நல்லெண்ணங்களை வளர்க்கப்பாடுபடும். இதன் வளர்ச்சி வழியாக நம் திருமடத்தின் செயல்பாடுகளும் பரவலாக அறியப்படும்.

இதன் வளர்ச்சிக்கு அம்மை திருநெல்லையும் அப்பன் கொற்றவாளீசுவரரும் திருவருள் புரியவும், ஆண்டவர் தொடங்கி நாச்சியப்ப சுவாமிகள் ஈறாகக் குருவருள் துணை புரிவதாக.

# கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் வரலாறு

**(காப்பியக் கவிஞர் நா. மீனவன்)**

## அருள்மிகு முத்துராமலிங்க தேசிகர் (கோவிலூர் ஆண்டவர்)

கோவிலூர் - மாணிக்க வாசகருக்கு அருள்புரிந்த திருப்பெருந்துறைக்கு மேற்கில் கண்டதேவிக்கு வடக்கில் திருப்புத்தூருக்குக் கிழக்கில் திருமெய்யம் என்னும் திருத் தலத்திற்குத் தெற்கில் உள்ள நான்கு திருத்தலங்களுக்கும் இடையில் உள்ளது கோவிலூர்த் திருத்தலம். இத்தலத்தை இவ்வளவு சிறப்புடையதாக்கி இங்கே ஒரு திருமடத்தை உருவாக்கி அதன் ஆதி குருநாதராக விளங்கியவர் ஸ்ரீ முத்திராமலிங்க ஆண்டவர். நகரத்தார் பலருடைய பொருளுதவியோடு இவ்வாலயத்தை உருவாக்கிய ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரின் வரலாற்றுச் சுருக்கம் கீழே தொடர்கின்றது.

**தோற்றம் :**

அங்கயற்கண்ணி அரசோச்சும் பாண்டிய நாட்டின் தெற்கே உள்ளதும் நகரத்தார் பலர் நயமுடன் வாழ்வதும் கொப்புடையாள் கொலுவிருந்து அருளாட்சி செய்து வருவதுமான அழகிய நகரம் காரைக்குடி. இங்கு வாழ்ந்து வந்த தனவைசிய குலத்தைச் சார்ந்தவர் குமரன் செட்டியார். அவருடைய மகனான மெய்யப்ப செட்டியாருக்கும் வள்ளியம்மை ஆச்சிக்கும் அவர்கள் முற்பிறப்பில் செய்த புண்ணியப் பயனாய்ச் சச்சிதானந்தப் பேரொளியாகிய பரம்பொருளாம் சிவபெருமானே முத்திராமலிங்கம் என்ற திருப்பெயருடன் தோன்றினார்.

**இளவயது அருளாடல்கள் :**

முத்திராமலிங்கம் இளவயதிலேயே அனைத்துக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். காரைக்குடியின் மேற்கே உள்ள

திருமடத்தில் வந்து அவ்வப்போது தங்கி வைராக்கிய மனமுடையவராய் இவ்வுலகம் மாயத் தோற்றமே என்பதை உளங்கொண்டவராய்ப் பலரும் வியக்குமாறு தத்துவப் பொருள்களைச் சித்தம் தெளிவுற உபதேசித்தார். பின்னர் தமக்கேற்ற சிறந்த குருநாதர் ஒருவரை அடைய உளங் கொண்டவராய் அக்காலத்தை எதிர்நோக்கி இருந்தார். அக்காலத்தில் ஒருநாள் தம்முடைய திருமேனி முழுவதும் முழுநீறு பூசிய நிலையோடு தியானத்தில் இருந்த பொழுது அவர் கருத்தை அறியாத அவருடைய பெற்றோர் ஏதோ தீய தேவதைகளின் சேட்டையால் ஒன்றும் பேசாது இருக்கின்றனனோ ? என்று மனம் வருந்தினர். அண்மையில் இருந்த தேவிகோட்டை நகர் சென்று ஒரு சுவாமியாடியின் மூலம் பரிகாரம் காண்போம் என்ற கருத்துடன் அழைத்துச் சென்ற பெற்றோர் அச்சுவாமியாடியின் அண்மையில் இருந்த முத்திராமலிங்கத்தை நோக்கிச் சுவாமியாடிக்குத் தாம்பூலம் மடித்துக் கொடு என்றனர். ஆண்டவரும் சுவாமியாடியைச் சோதிக்க எண்ணிப் பாக்கை வெட்டிக் கொடுத்தவுடன் சுண்டைக்காயளவு மூன்று சுண்ணாம்பு உருண்டைகளை வெற்றிலையுடன் சேர்த்துக் கொடுத்தார். அதனை வாங்கி மென்ற சுவாமியாடியின் வாய் வெந்து போனது. உடனே வெற்றிலையைத் துப்பிய சுவாமியாடி யார் தனக்கு இவரைத் தாம்பூலம் தரச்சொன்னது என்று கேட்க ஆண்டவரும் சுவாமியாடியை நோக்கித் தங்களைப் போன்றவருக்குக் கொஞ்சமாகக் கொடுக்கலாமா என்று தங்களுக்குச் சுண்ணாம்பை அதிகமாகக் கொடுத்தேன் என்று கேலி செய்ய அத்துடன் சுவாமியாட்டம் நின்று போனது. இது போலப் பல திருவிளையாடல்களை ஆண்டவர் இளமையில் செய்து காட்டியதுண்டு.

**ஆண்டவர் சிக்கல் பதிக்கு எழுந்தருளல் :**

திருநாகைக் காரோணம் என்ற நாகைப்பட்டினம் என்ற

நகருக்கு ஆண்டவரின் தந்தையார் வணிகத்தின் பொருட்டுப் பயணப்பட்டார். தாமும் உடன் வருவதாகக் கூறிய ஆண்டவரையும் உடனழைத்துச் சென்றார். அச்சிக்கல் பதியில் உகந்தலிங்கர் என்ற பெயருடைய ஞானி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரையே இவர் குருவாகக் கொண்டார்.

**ஆண்டவரின் குருபரம்பரை :**

தென்முகக் கடவுளான தட்சிணா மூர்த்தி என்பவரே முதல் உலக குரு ஆவார். அவருடைய மாணாக்கர்கள் நால்முனிவர்கள்; அவர் மாணாக்கர் விண்டு, பின் வசிட்டர், பின் சத்தி பின் பராசரர் பின் வேத வியாசர், பின் சுக முனிவர், பின் கௌடபாதர், பின் கோவிந்த யோகி, பின் ஆதி சங்கரர், பின் பத்ம பாதர், அத்தா மலகர், தோடகர், வார்த்திகர் ஆகிய நால்வர்; அவர்களைத் தொடர்ந்து வித்தியாரண்யர், சுப்பிரமணிய தேவர், நயன ஈசன், அழகப்ப ஆரியன், வீரபத்திர குரு, திருநாகைக் காரோணம் வெற்றிலைக்கடை முத்தைய சுவாமிகள்; அவரது மாணாக்கர் உகந்தலிங்க தேசிகர். இவரே ஆண்டவரின் குருநாதர் ஆவார்.

**உகந்தலிங்க தேசிகர் :**

திருவள்ளுவர் கபீர் தாசர் ஆகியோரைப் போல இவரும் நெசவுத் தொழில் செய்து வந்தவர். தம்முடைய நெசவுத் தொழில் மூலம் வரும் வருவாயை மூன்று பங்காக்கி மறுநாள் நெசவுக்கு நூல் வாங்க ஒரு பகுதியை வைத்துக் கொள்வார். குடும்பச் செலவிற்கென ஒரு பகுதியைச் செலவிடுவார். அடியவர்களுக்கு அன்னதானம் செய்ய ஒருபகுதியை வைத்துக் கொள்வார். குடும்ப வாழ்வில் சாதுவைப் போல வாழ்ந்த இவரைத் தேடி வருவோர் பலரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஞானாசிரியர் ஆக விளங்கி வந்தார். இதனைக் கேள்வியுற்ற இராய வேலூரைச் சார்ந்த கந்தப்ப சுவாமிகள் என்பார்

உகந்த தேசிகரைச் சரணடைந்து அவரை வழிபட்டுத் தமக்கு ஞானத்தைப் போதிக்குமாறு வேண்டினார். அவரும் அவரைக் குருகுல வாசம் செய்தருளக் கட்டளையிட்டார்.

மறுநாள் நெசவுக்காக நூலை நனைத்துப் பிழிந்தெடுத்த வடிகஞ்சியைச் சாதுக்களுக்கு வழங்கினார் தேசிகர். மற்றவர்கள் அக்கஞ்சியைப் பருக மனம் பொறாது பிட்சை பெறச் சென்றனர். கந்தப்ப சுவாமிகளோ மனம் கோணாது அக்கஞ்சியை உண்டார். அவரது பக்குவ நிலையைக் கண்ட தேசிகர் அவருக்கு வேதாந்தத் தொடர்பான செய்திகள் அனைத்தையும் போதித்து ஞானியாக்கினார். பின்னர் அவர் திருவண்ணாமலை சென்று அங்கொரு மடம் அமைத்து அங்கிருந்து ஞானோபதேசம் செய்து வந்தார்.

**ஆண்டவரும் உகந்தலிங்க தேசிகரும் :**

சிக்கல் நகருக்குத் தந்தையாருடன் சென்ற ஆண்டவர் கடையில் இருக்கின்ற போது சோதிடத்திலும் இரேகை சாத்திரத்திலும் இலக்கியத்திலும் மருத்துவத்திலும் வல்லவரான மதுரைச் சொக்கலிங்கம் பிள்ளை என்ற கணக்கர் ஆண்டவரின் கை ரேகைகளை ஆராய்ந்து பார்த்து வியப்படைந்து இக்குழந்தை தட்சிணாமூர்த்தி அவதாரமாய் இருத்தலால் இதன் மூலம் உலகம் மிக்க நலம் பெறும் என்று எண்ணி ஆண்டவரை உகந்தலிங்க தேசிகர்பால் அழைத்துச் சென்று ஞானோபதேசம் செய்து வைக்க வேண்டினார். ஆண்டவர் அக்கணக்கர் சொக்கலிங்கம் பிள்ளையின் முதலாளியாகிய மெய்யப்ப செட்டியாரின் பிள்ளை என்பதறிந்த தேசிகர் ஆண்டவரை நோக்கி அவரது அறிவாற்றலை உணர்ந்து அங்கிருந்த ஞான வாசிட்டம் என்ற நூலைப் படிக்குமாறு கூற ஆண்டவரும் அதில் ஒரு பகுதியான இக்குவாகு கதையைத் தம்முடைய கம்பீரமான குரலால் படித்துக் காட்டினார். தேசிகரும் வியப்புற்று இளமையில்

இத்தகைய ஆற்றலுடைய குழந்தையைக் காண்பதரிது; இவன் ஒரு காரணம் பற்றியே உலகிடைத் தோன்றியுள்ளான்; குருபோதனா முறையை விளக்கவே இவ்வாறு நடிக்கின்றான் என்று உள்ளம் மகிழ்ந்து அன்று முதல் ஆண்டவருக்கு அனைத்து வேதாந்த நூல்களையும் முறையாகப் போதிக்கத் தொடங்கினார். அப்பொழுது ஆண்டவருக்கு வயது பதின்மூன்று.

### ஆண்டவர் திருமணம்

இந்நிலையில் தேவிகோட்டை நகரிலே பிறந்த மீனாம்பிகை என்ற பெண்ணை ஆண்டவருக்கு மணம் முடித்தனர். பின் காரைக்குடி நகரில் களிப்புடன் வாழத் தொடங்கினர்.

### ஆண்டவர் பற்றி யோகியின் கருத்து

இவ்வாறிருக்கையில் ஒருநாள் அந்தண யோகி ஒருவர் காரைக்குடிக்கு வந்து சில நாள் இருந்தனர். வந்தவர் அங்கிருந்தவரை நோக்கி இங்கு யாரும் ஞானிகள் உளரோ ? என்று வினவ அவர்களும் ஆண்டவரைப் பற்றிக் கூறினர். யோகியாரும் அவரை அழைத்து வரச் செய்து அவரைக் கண்டார். அவரது குணங்குறிகளை நோக்கிய யோகியார் அவர் ஓர் அவதாரம் என்று எண்ணி அங்கிருந்தோரை நோக்கி இவரைப் பிள்ளை என்று எண்ணாதீர்; இவர் தட்சிணாமூர்த்தியின் கலையாவார் என்பதை அறியுங்கள் என்று அறிவித்தநாள் முதல் ஆண்டவரைச் சிவபெருமானாகக் கருதி வழிபடத் தலைப்பட்டனர்.

### ஆண்டவர் சிக்கல் பொருள் வைத்த சேரிக்குப் பயணப்படல்

தம்மிடம் அன்பு கொண்ட நல்லான் செட்டியார் என்ற நண்பருடன் சிக்கலைச் சார்ந்த பொருள்வைத்த சேரிக்குச் சென்று தம் குருநாதராகிய உகந்தலிங்க தேசிகரைக் கண்டபின் தம்முடைய கடை

வணிகத்தைக் கவனிக்கத் தொடங்கினார். தம் குடும்பச் செலவிற்கு வேண்டிய பொருளை அனுப்பி வைத்தபின் எஞ்சியதில் ஒரு பகுதியைத் தம் நண்பர்களுக்காகச் செலவிடுவார். மீதியைத் தம்குருநாதர் குடும்பச் செலவிற்கென அனுப்பி வைப்பார். பின்னர் குருநாதர்பாற் சென்று கற்க வேண்டியவைகளைக் கற்றுக் கொள்வார்.

### ஆண்டவரும் கொப்புடையாளும்

சிக்கலில் இருந்த ஆண்டவருக்குக் கடுமையான காய்ச்சல் ஏற்பட்டது. அதனால் சற்றுத் துயில் கொண்ட போது கொப்புடையம்மை ஒரு பெண் வடிவில் வந்தாள். அவளை நீ யார் ? என்று ஆண்டவர் வினவ, நான் இருப்பது காரை மாநகரம்; உனக்குக் காய்ச்சல் வந்ததை அறிந்து அதனைக் குணமாக்க நீர் கொண்டு வந்தேன் என்று கூறிய கொப்புடையாள் அதனைப் பருகப் பணித்தாள். ஆண்டவர் அதனைப் பருகியவுடன் பார்த்த போது அப்பெண் மறைந்து போனாள். ஆண்டவருக்கு உண்டான காய்ச்சலும் நின்று போனது. ஆண்டவர் இதனை மறுநாள் தம்முடைய குருநாதரிடம் கூறினார். ஆண்டவரும் கொப்புடையாளே இவ்வாறு நமக்கு அருளினாள் என மகிழ்ந்து வணங்கி

ஆலோன் இறந்தும் உமைபாகத்(து)
அண்ணல் இறந்தும் கமலம்உறை
நாலு)ஆ நனத்தோன் முடித்(து) இறந்தும்
நார தாதி யோர்இறந்தும்
காலா திகளும் ஒழிந்(து) இறந்தும்
ககனம் ஆதி அழிந்(து) இறந்தும்
மாலோ கங்கள் இறந்துநின்றாய்
அம்மே கொப்பு டையாளே

என்ற கவியைச் சொல்லி வணங்கினார்.

(தொடரும்)

# திருநெல்லை நாயகி உடனாய கொற்றவாளீசுவரர் கோவில் திருப்பணிகள்

காளையார்கோவிலில் இருந்து ஆட்சிபுரிந்த வீரபாண்டியன் என்னும் அரசன் இறைவனருளால் சமிவனம் என்னும் காட்டை அழித்து ஆலயம் உண்டாக்கினான். அங்கு எல்லா வகையான சந்நிதிகளையும் அமைத்து, பூசை, விழாக்கள் நடத்த ஏற்பாடு செய்தான். அங்கே ஒரு நகரத்தையும் அமைத்துப் பல இனத்தவரையும் குடியேற்றி வாழச் செய்தான். அந்த ஊரே பிற்காலத்தில் கோவிலூர் எனப்புகழ் பெற்றது.

வீரபாண்டியன் செய்த திருப்பணிகளுக்குப் பிறகு வெகுகாலமாய்த் திருப்பணிகள் செய்யப் பெறாமல் இருந்தது. கி.பி 1818ஆம் ஆண்டு கோவிலூர் மடாலயத்தில் முத்துராமலிங்க சுவாமிகள் என்னும் ஆண்டவர் சுவாமிகளின் முயற்சியாலும் முற்காலத்தில் நகரத்தார்கள் கொடுத்த பெரும் பொருள் உதவியாலும் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், பரிவார ஆலயம், இராஜ கோபுரங்கள் அமைக்கப்பெற்றன. பிற்காலத்தில் சிதம்பர சுவாமிகளால் (கருணாநிதி சுவாமிகள்) சோமாஸ்கந்தருக்குக் கருங்கல்லால் இழைத்த ஆலயமும் கல்யாண மண்டபமும் திருக்குள மைய மண்டபமும் அமைக்கப்பெற்றன. பின்னர் 1908-ஆம் ஆண்டில் திருமாளிகைப்பத்தி அணியொட்டிக்கால் மண்டபமும் திருநெல்லையம்மைக்குக் கருங்கல்லால் இழைத்த கர்ப்பக்கிரகமும் அர்த்த மண்டபமும் திருவருளால் நிறைவேறின. அதனையொட்டி, கீலக வருடம் சித்திரை மாதம் பதினொன்றாம் நாள் வீர சேகர ஞானதேசிக சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் திருக்கோயில் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

# கோவிலூர் ஆதீனத்தின் தொடர்பு மடங்கள்

1. கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307.
காரைக்குடி வட்டம்
சிவகங்கை மாவட்டம்
சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்
திரு. நா. நாராயணன்
தொலைபேசி : 04565 - 236846

2. ஈசான்ய மடம்
புதிய பேருந்து நிலையம் அருகில்
திருவண்ணாமலை - 606 601
தொலைபேசி : 04175 - 252649
பொறுப்பாளர் :
திரு.இராம. அண்ணாமலை (ஏ) மீனாட்சி சுந்தரம்
(விருந்தினர் அறை வசதி உண்டு)

3. சண்முக சுவாமி மடம்
விழுப்புரம் - பாண்டி சாலை
வளவனூர் - 605 108
பொறுப்பாளர் : தவத்திரு சுப்பிரமணிய சுவாமிகள்

4. சபாபதி சுவாமிகள் மடம்
தென்பள்ளிப்பாட்டு
மேட்டுப்பாளையம்
லசப்பாக்கம் - 606 751
திருவண்ணாமலை மாவட்டம்
பொறுப்பாளர் : தவத்திரு முருகானந்த சுவாமிகள்

5. கோ.சித. மாடலயம்
(பொன்னம்பல சுவாமி மடம்)
50, மன்னார்குடி சாலை
சிதம்பரம் - 608 001
தொலைபேசி : 04144 - 220030
பொறுப்பாளர் : திரு.சிவ. இராமனாதன்
(விருந்தனர் அறை வசதி உண்டு)

6. கோ.சித. மடாலயம்
(தத்துவராய சுவாமிகள் மடம்)
விருத்தாசலம் சாலை
எறும்பூர் - 608 704.
(சேத்தியா தோப்பு அருகில்)
பொறுப்பாளர் : திரு.சிவ. இராமநாதன்

7. கோ.வீர. மடாலயம்
(திருக்களர் ஆண்டவர் மடம்)
திருக்களர் - 614 710
நடுவக்களப்பால் வழி
மன்னார்குடி வட்டம், திருவாரூர் மாவட்டம்
தொலைபேசி : 04367 - 204354
பொறுப்பாளர் : பிச்சையாத் தேவர்
(விருந்தினர் அறை வசதி உண்டு)




9. நாராயண சுவாமி மடம்
முதன்மைச் சாலை
அண்ணா சிலை அருகில்
மானாமதுரை - 630 606
சிவகங்கை மாவட்டம்
பொறுப்பாளர் : மேலாளர் கோவிலூர் மடாலயம்

10. காசிகாநந்த சுவாமி மடம்
மதுரை முதன்மைச் சாலை
திருப்புவனம் - 630 611
சிவகங்கை மாவட்டம்
பொறுப்பாளர் : மேலாளர் கோவிலூர் மடாலயம்

11. குட்டைய சுவாமி மடம்
164, தெற்கு வெளி வீதி,
மதுரை - 625 001
தொலைபேசி : 0452 - 230017
பொறுப்பாளர் : M. அருணாசலம் செட்டியார்

12. கா.சே. வேதாந்த மடம்
தெற்கு ரத வீதி

காளையார் கோவில் - 623 551
சிவகங்கை மாவட்டம்
தொலைபேசி : 04575 - 232108
பொறுப்பாளர் : M. அருணாசலம் செட்டியார்

13. கோவிலூர் மடாலயம்
50-52, குப்பையா செட்டி தெரு,
(மாம்பலம் இரயில் நிலையம், மேட்லி சாலை பாலம் அருகில்)
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 044 - 24719122
பொறுப்பாளர் : திரு.க.லெ. கண்ணப்பன்
(விருந்தினர் அறை வசதி உண்டு)

14. கோவிலூர் வேதாந்த மடம்
(சுவாமி தயானந்த ஆஸ்ரமம் அருகில்)
அ.பெ.எண் 20, புராணி ஜாடி
ரிஷிகேஷ் - 249 201
உத்தராஞ்சல்
தொலைபேசி : 0135 - 2436968
பொறுப்பாளர் : திருமதி. விசாலாட்சி மெய்யப்பன்
(விருந்தினர் அறை வசதி உண்டு)

15. கோவிலூர் வேதாந்த மடம்
20, தெற்கு படேல் நகர்,
படேல் நகர் மெட்ரோ ஸ்டேஷன் அருகில்
புது டில்லி - 110 008
பொறுப்பாளர் : திருமதி. விசாலாட்சி மெய்யப்பன்
(விருந்தினர் அறை வசதி உண்டு)

16. கலாசேத்ரா பப்ளிகேஷன்ஸ் விற்பனை அலுவலகம்
50-52, குப்பையா செட்டி தெரு,
(மாம்பலம் இரயில் நிலையம், மேட்லி சாலை பாலம் அருகில்)
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
தொலைபேசி : 044 - 24719122
பொறுப்பாளர் : திரு. மு. பழநி
(விருந்தினர் அறை வசதி உண்டு)

# கோயிலூர்ப் புராணம்

**(முனைவர் நா. வள்ளி)**

நகரத்தார் வசிப்பிடங்களுள் ஒன்றாகிய காரைக்குடியில், நகரத்தார் மரபில் பிள்ளையார்பட்டிக் கோவில் பிரிவில் கி.பி. 1791ஆம் ஆண்டு, மெய்யப்பச் செட்டியார் - வள்ளியம்மை ஆச்சி தம்பதியருக்குக் கருவிலே திருவுடையாராகத் தோன்றியவர் முத்துராமலிங்க தேசிகர் என்னும் கோவிலூர் ஆண்டவராவார்.

அவர் காலத்தில் காரைக்குடியில் சிவன் கோவில் இல்லை. அதனால் காரைக்குடிக்கு அருகிலுள்ள கழனிவாசலுக்குச் சென்று அங்கு கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருநெல்லையம்மன் உடனாய கொற்றவாளீசுவரரை வணங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் முத்துராமலிங்கர். அக்கோயில் பழுதுபட்டிருந்ததைக் கண்ட முத்துராமலிங்கர் அதைத் திருப்பணி செய்யத் திருவுளங் கொண்டு, சற்று அயர்ந்திருந்த வேளையில், திருநெல்லையாலேயே முத்துராமலிங்கரின் தாயார் மூலம் நினைவூட்டப்பெற்று கி.பி. 1808 -இல் தொடங்கி, திருநெல்லையம்மைக்குக் கர்ப்பகிருகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், இராஜ கோபுரம் மற்றும் கொற்றவாளீசர்க்கு இராஜ கோபுரம், நித்திய கல்யாணி - கைலாசநாதர்க்கு ஆலயங்கள் செய்வித்து, அஃதன்றி அத்திருநெல்லை அம்மையே கொண்டுவந்து கொடுத்த தேங்காயை உடைத்துத் தாம் தொடங்கிய கோவிலூர் மடாலயத்தைக் கற்பணியாக்கி அதற்குக் களத்தூர் என்னும் ஒரு அரிய பெரிய கிராமத்தைத் தேடுவித்துக் கோவிலூரை ஆண்டதால் கோவிலூர் ஆண்டவர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கினார் முத்துராமலிங்கர். அவர் காலம் முதல் கோவிலூரும், கோவிலும் சிறப்புடன் திகழ்ந்தன.

முத்துராலிங்கர் செய்த திருப்பணிகளுக்குப் பிறகு, கோயிலைச்சுற்றி ஊரமைந்து அப்பகுதி, கழனிவாசலிலிருந்து பிரிந்து கோவிலூர் என்றழைக்கப்பட்டது. முத்துராமலிங்கர் கோவிலூரில் நிறுவிய மடம் வேதாந்த மடமாகும்.

நகரத்தார்கள் தென்கிழக்காசிய நாடுகளுக்குச் சென்று பெரும் பொருள் ஈட்டிய காலக்கட்டத்தில் வாழ்ந்த முத்துராமலிங்கர், தாம் திருப்பணிகள் செய்ததுமன்றி, நகரத்தார்களையும் தத்தம் ஊர்களிலும், பாடல்பெற்ற தலங்களிலும், ஏனைய தலங்களிலும் திருக்கோயில் திருப்பணிகளோடு, வேதபாடசாலைகள், தேவாரப் பாடசாலைகள், பசுமடங்கள், குருபூசை மடங்கள், நந்தவனங்கள், அன்னசத்திரங்கள் முதலான அறப்பணிகள் செய்யவும் தூண்டினார். நகரத்தார்களும் அவ்வாறே செய்தனர்.

இவ்வாறு ஆண்டவர் காலம் முதல் திருப்பணிகள் செம்மையாக நடந்து வருவதை,

மடமுண்டோ சிவாலயங்கள் மிகுதி யுண்டோ
வாசிட்டம் படிப்பதுண்டோ மனத்துள் ஞானத்
திடமுண்டோ நால்வர் தமிழ் படிப்பா ருண்டோ
திவ்வியமாம் உதாரமுதற் குணங்க ளுண்டோ
விடமுண்டோன் அடியர்குழாம் மிகுதி யுண்டோ
மெய்யறம் சத்திரம் விரைப் பூங் காவு முண்டோ
வடகயிலைக்கு இறைவனெனும் முத்து ராம
வள்ளல்திருக் கழனிநகர் வாரா முன்னே

என்ற சேந்தனி பழனியப்பய்யாவின் பாடல் மூலம் அறியலாம்.

கி.பி. 1818 இல் முத்துராமலிங்க தேசிகர் கோவிலூரில் ஏற்படுத்திய மடம் வேதாந்தமடமாகும். நகரத்தார் மரபைச் சேர்ந்தவர்களே இம்மடத்தில் மடாதிபதியாக வர முடியும். நகரத்தார்களில் துறவு மேற்கொள்ளும் பழக்கம் கோவிலூர் மடம் ஏற்பட்ட பின்னரே பெரிதும் பரவியது. தொண்ணூற்றாறூர் நகரத்தார்கள் ஒருங்கு கூடி ஒருமுடிவு எடுக்க வேண்டுமென்றால் கோவிலூர் மடத்தில் கூடுவது வழக்கம்.

இம்மடத்தில் வடமொழியிலுள்ள வேதாந்த நூல்கள் தமிழ்ப்படுத்தப்பட்டு முறைப்படி பயிற்றுவிக்கப்பட்டன. வடமொழி தெரிந்தவர்கள்தான் வேதாந்தம் படிக்க முடியும் என்ற நிலைமாறி,

தமிழ் மொழியில் வேதாந்தம் படிப்பதற்கு வகைசெய்த மடம் என்ற அளவில் வேதாந்த தத்துவ வரலாற்றில் கோவிலூர் மடம் முக்கிய இடம் பெற்றுள்ளது. சாதாரணத் தமிழ்ச் குடிமகன் கூட அத்துவைதக் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுவதற்கு ஏற்ற வகையில் தமிழில் பல நூல்களை வெளியிட்டது இம்மடம். தமிழகத்திலும் பிறபகுதிகளிலும் பல வேதாந்த மடங்கள் உருவாவதற்கு அடிப்படைக் காரணமாக கோவிலூர் மடம் விளங்கியது.

கோவிலூர் ஆண்டவருக்குப் பிறகு பொறுப்பேற்ற மடாதிபதிகள் கோவிலூரைக் கலைமலிந்த ஊராக வளர்த்தும், வேதாந்த மடமாக இருப்பினும், சைவத்தையும், தமிழையும், தமிழ்ப்புலவர்களையும் ஆதரித்து வந்தனர்.

அவ்வகையில் கோவிலூர் ஆண்டவரின் அருள்பெற்ற சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் மடத்தில் அருளாட்சி செய்து வருகின்ற காலத்தில், திருவாவடுதுறை ஆதீனப் பெரும் புலவராக விளங்கியவரும், இரண்டாவது கம்பர் எனப் போற்றப்பட்டவருமான மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கோவிலூர் மடத்திற்கு எழுந்தருளி, சிதம்பர ஞான தேசிக சுவாமிகளின் விருப்பப்படி கோயிலூர்ப் புராணம் என்னும் தல புராணத்தைப் பாடியருளினார்கள்.

மகாவித்துவான் அவர்கள் செட்டிநாட்டுப் பகுதிக்கு வருவதற்குக் காரணமாக இருந்தவர்கள் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவரும் தேவகோட்டையைச் சேர்ந்தவருமான வன்றொண்டர்ச்செட்டியா ராவார். தம் ஆசிரியரைச் செட்டிநாட்டுக்கு வரவழைத்து, கோவிலூர், கண்டதேவி, சூரைக்குடி, வீரவனம் என்னும் சாக்கோட்டை ஆகிய நான்கு தலங்களுக்கும் புராணம் பாடும்படிச் செய்வித்து, தாம் உற்றுழி உதவியதோடு ஆங்காங்கே உள்ள நகரத்தார்கள் மூலமாகவும் பொருளுதவி செய்வித்தார் வன்றொண்டர்ச் செட்டியார்.

தமிழில் அதிக எண்ணிக்கையில் தலபுராணம் பாடியுள்ள மகாவித்துவான் அவர்கள் கோவிலூர்ப் புராணம் உட்பட 22 தலபுராணங்களையும் ஏராளமான சிற்றிலக்கிய வகை நூல்களையும் இயற்றியுள்ளார்கள்.

சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் காலத்தில் பாடப்பட்ட கோயிலூர்ப் புராணம், 5-ஆவது பட்டமாகிய வீரசேகர சுவாமிகள் விருப்பத்தின்படி திரிசிரபுரம் வித்துவான் சி.தியாகராஜ செட்டியாரவர்களால் சென்னை திராவிட ரத்நாகர அச்சுக் கூடத்தில் விய வருஷம் தை மாதம் பதிப்பிக்கப்பட்டது.

**கோயிலூர்ப் புராண அமைப்பு :**

கோயிலூர்ப் புராணம் முழுவதும் விருத்தப்பாக்களால் பாடப்பட்டுள்ளது. 849 விருத்தப்பாக்களை உடைய இப்புராணம், பாயிரம் தொடங்கி சாபவிமோசனப் படலம் ஈறாக 15 படலங்களை உள்ளடக்கியது. அவை யாவன

1. பாயிரம்
2. திருநாட்டுப்படலம்
3. திருநகரப் படலம்
4. நைமிசப் படலம்
5. தலவிசேடப் படலம்
6. வீரபாண்டியன் சமிவனமடைந்த படலம்
7. மாயப்புலி நீங்கிய படலம்
8. கொற்றவாளீசப் படலம்
9. உபநிடதப் பொருளுரைத்த படலம்
10. மதுப்பிரியர் துதியுரைத்த படலம்
11. சுவேதராசப் படலம்
12. அன்னதான மகிமை உரைத்த படலம்
13. சுதன்மை அருள் பெறு படலம்
14. தீர்த்த மகிமைப் படலம்
15. சாப விமோசனப் படலம்

(தொடரும்)

# திருவாமாத்தூர்
# ஸ்ரீ திருவேங்கடநாதர் அருளிச் செய்த
# கீதாசாரத் தாலாட்டு

## முகவுரை

தொண்டை நாட்டில் மாதைப்பதியின் மன்னனாக விளங்கிய திருவேங்கடநாதர் என்னும் மறையோர் இந்நூலாசிரியர் ஆவார்.

இவருக்கு அறிவிலும் அழகிலும் சிறந்த இரு புதல்விகள் இருந்தனர். இவர்களுள் ஒருத்திக்கு மகப்பேறு வாய்க்கப் பெறாமையால் மனம் வருந்தி ஏங்கித் தவித்தனள். அன்பு மகளின் ஏக்கம் காணச்சகியாத திருவேங்கடநாதர் அழகிய கண்ணன் பொம்மை ஒன்றைக் கொடுத்து "இதனைத் தொட்டிலில் இட்டு, அருமை மைந்தனாகவே கருதித் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி மகிழ்ச்சி பெறுக" என ஆசி கூறினார். தாலாட்டும் பொருட்டு, பகவத் கீதையின் ஞானயோகத்தின் சாரமான தத்துவ உண்மைகளைத் திரட்டித் தாலாட்டுப் பிரபந்தமாகக் கூறினதால் இது கீதாசாரத் தாலாட்டு எனப் பெயர் பெற்றது. அம்மாது நல்லாள் தந்தையின் அருள் வாக்கின்படி பாலகிருஷ்ணனைத் தொட்டிலில் இட்டுச் சீராட்டித் தாலாட்டிவர, சில ஆண்டுகளில் சற்புத்திரப் பேறு வாய்த்து அளவிலா ஆனந்தம் அடைந்தனள் என்பது வரலாறு.

இத்தாலாட்டு தத்துவ ஞானங்கள் நிறைந்தது ; அர்ஜுனன் சந்தேகமும் கிருஷ்ண பரமாத்மா சமாதானமும் கூறும் வாயிலாக இயற்றப்பட்டுள்ளது. ஆத்ம, அநாத்ம பதார்த்தங்களின் இயல்புகளைக் கடினமின்றி இனிது அறியுமாறு செய்வது.

பந்த மோட்சங்களின் இயல்பு பற்றியும் ஒரு சிலர் முக்தர்களாயும் ஒரு சிலர் பெத்தர்களையும் இருப்பது எங்ஙனம் பொருந்தும் என்பது பற்றியும் சடம் ஆன தேகம் எவ்வாறு கர்மத்தைச் செய்யும், அக்கர்மபலனை எவ்வாறு அனுபவிக்கும் என்பது பற்றியும் ஆன பல ஐயங்கள் குறித்து மிக ஆழ்ந்த கருத்துக்களைத் தெளிவாகக்

கூறுகின்றது. தேகம், இந்திரியம் முதலிய அநாத்ம வஸ்துக்களை இது நான் அன்று என்று போக்குதற்குரிய நல் விவேகத்தினை எளிதில் உண்டு பண்ணுவது ; புத்திக் கூர்மை இல்லாதவர்களும் ஆத்ம தத்துவத்தினை உணருமாறு எளிதாகக் கூறுவது இந்நூல்.

## கீதாசாரத் தாலாட்டு
## சிறப்புப் பாயிரம்

ஆக்கியோன் பெயர், நூல் வந்த வழி, நூற்பெயர், நூற்பயன், நூற்பொருள், கேட்போர் தன்மை என்னும் ஆறு கூறுகளைக் கொண்டது சிறப்புப் பாயிரம் எனப்படும்.

மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்
காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் – கீதைக்
கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாரும்
கருத்துயர்தீர்ந்(து) எய்தக் கதி.

திருவாமாத்தூரில் சிறப்புற வாழ்ந்த வேத விற்பன்னரான வேங்கடநாதன் என்பவர் அர்ஜுனனுக்குக் கண்ணபிரான் அருளிய பகவத் கீதை என்ற நூலின் உயர்ந்த கருத்துக்களைத் தாலாட்டு வடிவமாக அமைத்து உரைத்திருக்கிறார். இதைப் படிப்பவர்கள் மீண்டும் பிறவி எடுக்க மாட்டார்கள்.

### காப்பு

ஐவகைப் பொருளும் நான்கு கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை இரண்டும் ஒன்றி யாவரும் திகைப்ப நின்ற
பொய் இருள் அகல ஞானப் பொருள்கதிர் விரித்த புத்தேள்
கைவளர் ஆழி செங்கண் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்

ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி ஆகியவை ஐந்து பூதங்கள் ; வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன்

என்பவை ஐந்து வாயுக்கள் ; வாக்கு, பாணி , பாதம், பாயுறு , உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்கள் ஐந்து; சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙவை, கிராணம் என்ற ஞானேந்திரியங்கள் ஐந்து ; சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்று விஷயங்கள் ஐந்து ; இவையே ஐவகைப் பொருள்களாகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கும் சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய குணங்கள் மூன்றும் நல்வினை தீவினை ஆகிய இரண்டும் என்று இவையாவும் ஒன்றி நான் எனது என்ற அகம்பாவத்தில் தோய்ந்து மயங்கி அனைவரும் திகைத்து நிற்கின்றனர். ஞான சூரியனாகக் கையில் சுதர்சனம் என்ற சக்கரத்தை ஏந்தி நிற்கும் செந்தாமரைக் கண்ணனை மனதினுள் வைத்துத் தியானம் செய்து அஞ்ஞான இருள் நீங்கப் பெறுவோம்.

(தொடரும்)

## கோவிலூர் மடாலயம் சார்பான நிகழ்வுகள்

15.4.2012 ஞாயிற்றுக்கிழமை முதல் 21.4.2012 சனிக்கிழமை வரை பக்தியோகம் என்னும் தலைப்பில் இமயகீதம் இதழ் ஆசிரியர் ஸ்வாமி ஸ்வரூபானந்தா அவர்கள் கோவிலூர் மடாலயத்தில் கீதைச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

14.5.2012 முதல் 20.5.2012 முடிய மடாலயம் சார்பில் இப்பகுதியில் உள்ள பள்ளிக் குழந்தைகளுக்கு ஓவியப் பயிற்சி அளிக்கப்பெற்றது. கும்பகோணம் அரசு நுண்கலைக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் மனோகர் அவர்களும் ஆசிரியப் பெருமக்களும் 40 மாணவச் செல்வங்களுக்கு ஓவியப் பயிற்சி அளித்தனர்.

14.5.2012 திங்கட்கிழமை முதல் 20.5.2012 ஞாயிற்றுக்கிழமை வரை கோவிலூர் மடாலயத்தின் சார்பில் கோடை காலத் தொல்லியல் அறிமுகப் பயிற்சி வகுப்புகள் நடைபெற்றன. டாக்டர். சு. இராசகோபால் முதலான தொல்லியல் அறிஞர்கள் பலரும்

பயிற்சி வகுப்பில் கலந்து கொண்ட மாணவர்களுக்குத் தொல்லியல் தொடர்பான கருத்துக்களை வழங்கினார்கள். 32 மாணவர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

நந்தன வருடம் வைகாசி மாதம் 16ஆம் தேதி செவ்வாய்க்கிழமை (29.5.2012) அன்று சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 90ஆவது பிறந்த நாள் விழாவும் அவர்தம் நினைவாகச் செட்டிநாடு பாரம்பரிய அருங்காட்சியகத் திறப்பு விழாவும் நிகழ்ந்தன. காப்பியக் கவிஞர் நா. மீனவன் வரவேற்புரை நல்கினார். வடலூர் சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம் நிறுவனர் சன்மார்க்க தேசிகர் ஊரன் அடிகள் தலைமையில் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அருங்காட்சியகத்தைத் திறந்து வைத்துச் சிறப்புரை ஆற்றினார். தமிழ் மூதறிஞர் முனைவர் தமிழண்ணல், கலைமாமணி டாக்டர் ஆறு. அழகப்பன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

8.6.2012 முதல் 10.6.2012 வரை இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் செட்டிநாடு என்னும் கண்காட்சி காரைக்குடி கண்ணதாசன் மணி மண்டபத்தில் நிகழ்ந்தது. கோவிலூர் ஆண்டவர் கல்வி நிறுவனங்களும் ராயவரம் திரு. குப்பான் செட்டியார் அவர்களும் இணைந்து நடத்திய கண்காட்சிக்கு, சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்துச் சிறப்பித்தார்கள். முனைவர் அய்க்கண், முனைவர். நா. வள்ளி, நபார்டு எஸ். கண்ணப்பன், மேனிலைப் பள்ளியின் தலைமையாசிரியர் திரு. வள்ளியப்பன் ஆகியோர் சிறப்புரையாற்றினர்.

நம் திருமடத்தின் வேதாந்தப் பாடத்திட்டப்படி முதல் நூலான நாநா ஜீவவாதக் கட்டளை வகுப்புகள் - 22 ஜுன் முதல் 28 வரை. திருச்சி மாவட்டம் காட்டுப்புத்தூர் நாராயண பிரம்மேந்திராள் மடாலய மடாதிபதி [illegible]னந்த சுவாமிகள் சிறப்பாக நடத்தினார்கள்.





## நாச்சியப்ப சுவாமிகள்

## கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கல்வித் துறையில் பாரம்பரியமிக்க அனுபவம் நிறைந்த கோவிலூர் மடாலயம் நடத்தும் இக்கல்லூரியில் (Subject to approval) மாணவ மாணவியர் சேர்ந்து படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

**2012-2013 ஆம் கல்வி ஆண்டுக்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.**

**கற்பிக்கப்பெறும் பாடப்பிரிவுகள் :**

| | |
|---|---|
| பி.எஸ்.ஸி கணிதம் | பி.எஸ்.ஸி கணினியியல் |
| பி.காம். | பி.காம் (கணினிப் பயன்பாட்டுடன்) |
| பி.பி.ஏ | பி.ஏ. ஆங்கில இலக்கியம். |

தொடர்புக்கு : **04565 - 234523, 94434 42361**

---

## நகரத்தார் திருமணச் சேவை மையம் கோவிலூர்

நம் சென்னைத் திருமடத்தில் கடந்த ஒன்பதாண்டுகளாக, தேவகோட்டை உயர்திரு. சோம. லெட்சுமணன் அவர்கள் வழிகாட்டுதலின் பேரில் நகரத்தார் திருமணச் சேவை மையம் நடைபெற்று வருகிறது.

அதன் சேவையை விரிவுபடுத்தி இப்போது நம் கோவிலூர் திருமடத்திலும் தன்னார்வத் தொண்டர்களின் ஆதரவால் நந்தன ஆண்டு சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

வாரந்தோறும் சனிக்கிழமை காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை திருமணச் சேவை நடைபெறுகிறது. அனைவரும் சேவையைப் பயன்படுத்த வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : www.nagarathar.net , www. nagarathermatrimony.com

# கோவிலூர் மடாலயம் நடத்தும் கல்வி நிறுவனங்கள்

1. கோவிலூர் ஆண்டவர் பாரம்பரியக் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி

   அ. திருமுறைக் கல்லூரி - 1995

   ஆ. நாதஸ்வரக் கல்லூரி - 1995

   இ. தவில் கல்லூரி - 1995

   ஈ. கல் சிற்பக் கல்லூரி - 2004

   உ. ஐம்பொன் சிலைக் கல்லூரி - 2005 (உலோகச் சிற்பம்)

   ஊ. மரச்சிற்பக் கல்லூரி - 2006

2. சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி - 1995
3. கோவிலூர் ஆண்டவர் மாண்டிசோரி பள்ளி - 1995
4. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி - 2007
5. கோவிலூர் ஆண்டவர் யோகா ஆராய்ச்சி மையம் - 2007
6. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி - 2009
7. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி - 2010
8. கோவிலூர் ஆண்டவர் சமுதாயக் கல்லூரி - 2010
9. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - 2012ல் தொடங்கப் பெற உள்ளது.